| | |
|---|---|
| வ்ருத்தா: | பெரியவர்கள் |
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம் |
| தமிமம் | அந்த இவனை |
| வயம் | நாங்கள் |
| ஆஶ்ரயாம | ஆச்ரயிக்கின்றோம் |

## பொழிப்பு

பெரியவர்காள்! ஒருவன் ஒரு கௌஸ்துபமணியை மார்பில் தரித்திருக்கின்றான், இன்னொருவன் ஆயிரம் பணாமணிகளுடைய ரத்ந ஆரத்தைத் தரித்திருக்கின்றான், இவர்களிற் சிறந்தவனை நீங்கள் உண்மையாகக் கூறினால், நாங்கள் அந்த மகாபுருஷனைச் சரணமாக வடைகின்றோம்.

## விதப்பு

ஒருவன் ஒரு கௌஸ்துபமணியைத் தரித்திருக்கின்றான் என்றது-ஹரியை, அது அவ்வரி அவ்வண்ணங் கௌஸ்துபமணியைத் தரித்திருத்தலால் இதனை—

கௌஸ்துபஸஹஸ்ராம்ஶுநிவ ருத்க்ஷேந்த்ரஸ்ய தஸ்யஸஹ:।
உரஸி விகஸச்ச்ரீ ஆநுநாராயண உரோமத:॥ என்று ஸ்ரீமகா பாரதத்திலும்,

"வெருவுமாலமும்பிறையும்வெவ்விடையவற்கீந்து
தருவும்வேறுள தகைகளுஞ்சதமகற்கருளி
மருவுதொல்பெருவளங்களும்வேறறவழங்கித்
திருவுமாரமுமணிந்தனன்சீதரோத்தி" என்று கம்பராமாயணத்திலும் வருதலைக்கொண்டுணர்க.

ஒருவன் ஆயிரம்பணாமணிகளையுடைய ஆரதனவாரத்தைத் தரித்திருக்கின்றான் என்றது - ஹரனை, அது ஹரன் அவ்வாறு தரித்திருத்தலால் இதனை—

" கணமவிரிகுடுமிச்செம்மணிக்கவைநாக
கறையணற்கட்செவிப்பகுவாய்ப்

| | |
|---|---|
| அநயோ: | இவ்விருவருக்குள் |
| அதிக: | சிறந்தவன் |
| கோவா | யாவன்? |
| இதி | இதனை |
| வ்ருத்தா: | பெரியவர்கள் |
| அநுசிந்த்ய | ஆலோசித்து |
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம் |
| தமிமம் | அந்த இவனை |
| வயம் | நாங்கள் |
| ஆச்ரயாம: | ஆச்ரயிக்கின்றோம் |

## பொழிப்பு

ஒருவன் இப்பொழுது பாஞ்சஜன்னியத்தைத் தரித்துக்கொண்டிருக்கின்றான், இன்னொருவன் அநேக பிரமகபாலங்களைத் தரித்துக்கொண்டிருக்கின்றான், இவ்விருவரில் சிறந்தவனிவனென்று பெரியவராகிய நீங்கள் கூறினால், நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாக அடைகின்றோம்

## விதப்பு

ஒருவன் பாஞ்சஜன்யத்தைத் தரித்திருக்கின்றானென்றது-ஹரியை, அது அப்பாஞ்சஜன்யத்தை யவ்வரி தரித்திருத்தலால

அதுவும் கழிந்த துவாபரயுகத்தின் கடைசியிலாதலால், இப்பொழுதென்று சமீபகாலம் குறித்துரைக்கப்பட்டது ஹரி தனது கண்ணாவதாரத்தில் அவந்திநாட்டிலிருந்த சாந்தீபமுனிவனிடத்து வேதாகமாதிகலைகளைக் கற்றுணர்ந்து தங்குரவனை வணங்கி அடியேன் நுமமாட்டுக்கற்ற கல்விக்குத் தக்கணை யென்னையென்று கேட்டதற்கு அம்முனி தனது மனைவியுடனாலோசித்துக் கண்ணா! எமக்கு நீயருளும் தக்கணை கடலாட்டி லிறந்த எம்மகனை அழைத்தெமக்குக் கொடுத்தல் என்றனன். உடனே ஹரி கடற்கரையையடைந்து வருணனை யழை

த்து என் குரவன மகனைக் கொன்றவன யாவனென்ற கேட்டனன். அதற்கவ்வருணன் யானறியேன், இககடலுள வாழும பாஞ்சஜனுக விருக்கலாம எனறனன பின்னா கண்ணன கடலிலிருநத பாஞ்சஜனைத தேடிக்கண்டு அவனேடு போபுரிநது அவன மாயைபபிளந்து அவன் வயிறறுக்குளிருநத பாஞ்சஜனனியமெனனும சஙகததையெடுத்து அண்டமதிர ஊதினன் உடனே யமன குருமகனை அளிததனன அளிததவனைக குருவினிடங கொடுததுத தனனிடததிறகுச சென்றனன் இதனை—

"வஞசமபடைதத பறிவெணடிஙாவேலையூடு
துஞ்சுநதிறல்வாளவுணனறனைசசூழ்நதுபறறி
நெஞ்சமபிளநதுநிலவுக்கதிாசசங்குகொணடான்
கஞ்சஙகருககுஙகருனைததடஙகணணனமாதோ" என்று சுக பாகவததது‌ம்,

"பரவையினெய்திபபஞசசனனைசசெற்றகன்றபாரின
மருதிறவுதைததகோமான்மறறவனவயிறறைப்போழ்நதே
யிரவியனவிாகொணடோஙகுபாஞ்சசனனியததையோரா
கரதலமபறறியணடஙகலஙகிடவூதினுல" எனறு நாரத பாகவததது‌ம் வருதலாலுணாக

ஒருவன அநேக பிரமாகளுடைய மண்டையோடுகளைத தரிததிருக்கின்றுன் என்றது – ஹரனை, அது அவவரன் அவவாறணிநதிருததலால.

ஹரன பிரமாதிகளிறக்கும பிரளயஙகளாகிய மஹா பிரளயஙகளில் ஒவவொரு பிரமாகளையும சுட்டெரிதது அவர்களின மண்டையோடுகளைத் தரிததிருககின்றுன் இதனை—

"ஒள்ளொளிபபிரமசிரசினுஙகளையான்மகேச்சுரனுலப்பினுளமரும்
எள்ளருந்தேவாதானவாயாருமிறப்பவோாகணத்தினிலெரித்தூத
தள்ளரும்பிரமர்தலையொடென்பணிந்துசங்கரிகண்டுகேண்களிப்ப
வள்ளிலைச்சூலவேறிரிததினி திருனந்தடம்புரிந்திடுவான்" என்று கூர்மபுராணத்தும்,

## பதப்பொருள்.

| | |
|---|---|
| ஏக: | ஒருவன் |
| வ்ரஜேஷு | மாட்டுக்கொட்டாய்களில்-தொழுவுகளில் |
| ம்ருது | மிருதுவான |
| வேணு | மூங்கிற் குழலாலாகிய |
| நாதம் | ஓசையை |
| குருதே | செய்கின்றான், |
| அந்ய: | இன்னொருவன் |
| லயேஷு | பிரளயகாலத்தில் |
| விகடாட்டஹாஸம் | பயங்கரமான அட்டகாசத்தை |
| குருதே | செய்கின்றான், |
| அநயோ: | இவ்விருவருள் |
| அதிக: | சிறந்தவன் |
| கோவா | யாவன்? |
| இதி | இதனை |
| வ்ருத்தா: | பெரியவர்கள் |
| அநுசிந்த்ய | ஆலோசித்து |
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம். |
| தமிமம் | அந்த இவனை |
| வயம் | நாங்கள் |
| ஆஸ்ரயாம: | ஆஸ்ரயிக்கின்றோம் |

## பொழிப்பு

ஒருவன் மாட்டுக்கொட்டில்களில் மெல்லிய வேய்ங்குழலிசையைச் செய்கின்றான், மற்றொருவன் சங்காரகாலத்தில் அட்டகாசம் செய்கின்றான், இவ்விருவர்களில் சிறந்தவன் இவனென்று விவேகிகளாகிய நீங்கள் கூறுவீர்களானால், நாங்கள் அந்த மஹாபுருஷனைச் சரணமாக அடைகின்றோம்.

பதப்பொருள்.

| | |
|---|---|
| அயம் | இந்த |
| ஏகோ | ஒருவன் |
| பக்ஷீந்திர: | கருடனை |
| வாஹந: | வாஹனமாகவுடையவன் |
| இதி | என்று |
| ப்ரதித: | பிரசித்தியடைந்தவன், |
| அந்யஸ்து | இன்னொருவனானால |
| மஹோக்ஷவரவாஹந: | சிறந்ததும சிரேஷ்டமானதுமான வ்ருஷபத்தை வாஹனமாகவுடையவன |
| இதி | என்று |
| அபிக்ய | பிரக்கியாதியடைந்தவன; |
| அநயோ: | இவ்விருவருக்குள் |
| அதிக: | அதிகமானவன |
| கோவா | யாவன ? |
| இதி | இதனை |
| வ்ருத்தா: | பெரியவாகள |
| அநுசிந்தியா | ஆலோசித்து |
| ஸத்யம் | உணமையை |
| ப்ருவந்து | சொல்லலாம |
| தம்மம | அந்த இவனை |
| வயம் | நாஙகள |
| ஆச்ரயாமஃ | ஆஸ்ரயிக்கின்றோம. |

ஈ௮

பொழிப்பு.

ஒருவன் கருடனை வாகனமாகவுடையவனென்று கீர்த்திபெற்றவன், இன்னொருவன் சிறந்ததும் உயர்ந்ததுமான இடபத்தை வாகனமாகவுடையவன்; இவரில் சிறந்தவனைப் பெரியவாகளான நீங்கள் கூறினால்,நாங்கள் உங்களால் சிறந்தவனென்று கூறப்பட்ட மகாபுருஷனைச் சரணமாக வடைகின்றோம்.

விதப்பு

ஒருவன் பக்ஷீந்திரவாகனன் என்றது - ஹரியை, அது அவ்வரி கருடனை வாகனமாகக் கொண்டிருந்தமையால் இதனை—

காசிபன் என்னும் முனியின் மனைவியர் பலரில் ஒருத்தியான விநதையென்பவள் பெற்ற மகனான கருடன் திருமாலோடு போர்புரிந்து திருமாலால் வெல்லப்படாது போனபோழ்து, கபடமாகக் கருடனைப்பார்த்து உனக்கு வேண்டிய வரங்களைக்கேள் தருகின்றேனென்று கூறியதனைக் கேட்ட கருடன் கலுகலென்று நகைத்து நாராயணா நீ என்னை வெல்லாமலே எனக்கு வரமளிக்கவந்தாய் இதுமொரு வேடிக்கைதான் என்று கூறி உனக்கு வேண்டுமானு லென்னைக்கேள் வரந்தருகின்றேன் என்றனன் உடனே ஹரி கருடனைப்பார்த்து நீ எனக்கு வாகனமாக இருக்கவேண்டுமென்று வரங் கேட்டனன. அதற்கவன் சம்மதித்தனன் அதனு லரிக்குக் கருடன் வாகனமாயினன். இதன் விரிவை புராணேதிகாசாதிகளி லுணர்க.

" கருமுகிருமரைக்காடீபூத்துநீ
டிருசுடரிருபுறத்தேந்தியேடவிழ்
திருவொடுமபொலியவோர்செம்பொற்குன்றின்மேல்
வருவபோறகலுழன்மேலவந்துதோன்றினன்" என்னுங் கம்ப

ராமாயணத்தாலும்,

" விட்டிலனறுருவனமூச்சுவிழுத்தவம்புரிதலானே
முட்டியதுமககுமாங்கேமூச்சுநாங்காத்துமென்னு
மட்டறவேதமேனிவரிச்சிறைப்புள்ளின்மேற்றிக்
கெட்டுநெல்லுருவக்காந்தியெறிதரவேகினுனல்" என்னும் பா

கவதத்தாலும்,

" குழல்கோவலாமடப்பாவையும்மண்மகளும்திருவும்
நிழல்போல்வனர்கண்டுநிற்குங்கொல்மீளுங்கொல்தண்ணந்துழாய்
அழல்போலடுஞ்சக்கரதண்ணல்விண்ணோர்தொழக்கடவுந்
தழல்போற்சினத்தவப்புள்ளின்பின்போனதனிநெஞ்சமே " என்று

## மொழிபெயர்ப்பு

வள்ளங் குலவு கடல்புடைசூழ் வையத் துற்ற வுயிர்களைப்போற்
கொள்ளுமயோனி சனனெனனக் குலவு மொருவன் கூறொருவன்
துள்ளும பிறவி யிலலாதத தூயோ னுகித துலஙகினன
எள்ளி லிவரிற சிறந்தவனயா ரிசைததாற பெரியோ ரிறைஞ்சுதுமே.

## பதப்பொருள்.

| | |
|---|---|
| ஏகஸ்து | ஒருவனுனல |
| யோநிஜ: | யோனியிற்பிறபபவன |
| இதி | என்று |
| ப்ரஸித்திம | பிரகயாதியை |
| வ்ரஜதி | அடைகிறான, |
| அந்யஃது | இனனொருவனேனவெனறால |
| அஜாத | பிறப்பிலலாதவன |
| இதி | என்று |
| ஸாவஜகதபிரஸித்திம | எலலா வுலகஙகளிலும பிரஸித்தியை |
| வ்ரஜதி | அடைகிறான்; |
| அநயோ: | இவாகளுக்குள |
| அதிக: | சிறநதவன |
| கோவா | எவன? |
| இதி | இதனை |
| அநுசிந்தியா | ஆலோசித்து |
| வ்ருத்தா: | பெரியவாகள |
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம் சொன்னல் |
| தமிமம் | அந்த விஷ்ணுவை |
| வயம் | நாஙகள் |
| ஆஸ்ரயாம: | ஆஸ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு.

ஒருவன் என்றும் யோனியில் பிறப்பவனுகக் கீர்த்தியடைகின்றன், இன்னொருவன் யோனியில் பிறவாதவனென்று கீர்த்தியடை

ன்றான், இவ்விருவரில் சிறந்தவனை அறிவுடையவர்கள் சத்தியமாகச் சொன்னால் நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாகவடைகின்றோம்.

விதப்பு

ஒருவன் யோனியிற்பிறப்பவனென்றது - ஹரியை, அது ஹரி யோனிவாயப்பட்டுப் பிறத்தலால

அதாவது கோசலையின் யோனியில் பிறந்தவனிராமன், தேவகியின் யோனியில் பிறந்தவன் கிருஷ்ணன், ரேணுகையின் யோனியிற்பிறந்தவன் பரசுராமன், அநசூயையின் யோனியிற் பிறந்தவன் கபிலன் என்று ஹரியின் பிறப்புரைக்கும் புராணவேதாதிகளாலறிக. இதனை—

"மண்மிசையோநிகடோறும்பிறந்தெங்களமாதவனே
கண்ணுறநிற்கிலுங்காணகில்லாவுலகோர்களெல்லாம
அண்ணலிராமாநுசனவந்தடுதோனறியவப்பொழுதே
நண்ணருஞானந்தலைக்கொண்டுநாரணற்காயினரே" என்றும்,

வண்ணமாடங்கள்சூழ்திருக்கோட்டியூர
கண்ணன்கேசவன்நம்பிபிறந்தநாள
எண்ணெயசுண்ணமெதிரெதிர்தூவிட [தது ம,
கண்ணன்முற்றங்கலந்தளறாயிற்றே" என்றும் நாலாயிரப்பிரபந்த

"ஒருபகலுலகெலாமுதரத்துட்பொதிந்
தருமறைக்குணர்வருமவனையஞ்சனக்
கருமுகிற்கொழுந்தெழிலகாட்டுஞ்சோதியைத
திருவுறப்பயந்தனடிறங்கொள்கோசலை" என்று இராமாயணத்தும்,

ஜயது ஜயது தேவோ தேவகீநந்தநோऽயம்
ஜயது ஜயது க்ருஷ்ணோ வ்ருஷ்ணிவம்சப்ரதீப:
ஜயது ஜயது மேகச்யாமள: கோமளாங்கோ
ஜயது ஜயது ப்ருத்வீபாரநாசோ முகுந்த: ॥ என்று

முகுந்தமாலையிலும் கேட்கப்படுதலாலுணர்க.

ஒருவன் யோனிவாயபபட்டுப் பிறவாதவனெனறது - ஹரனே,
அது ஹரன யோனிவாயப்பட்டு பிறவாமையால இதனை—

ஐஃ௦வாசுஶெரு ஶெவெகிஞ்ஞாஷீக - ஸஶெநுவஶெஷளஜ்ரு ஞஜ்ரு ஜாஷீக ஸகஶெஜவா ஹிதீய௦ - ஸவாஸஷஜஹா நஜ க்ஷ தாஜஶொாஜஶொாஜ்ரு ஶெதாவய௦ என்று சுருதியிலும,

"வைச்சபொருணமக்காகுமெனறெண்ணிநமச்சிவாய
வசசமொழிந்தேனணிதிலலையமபலததாடுகினற
பிசசன்பிறபபிலிபோநதியுநதியின்மேலசைசதத
கசசினழுகுகண்டாற்பின்னைக்கண்கொண்டுகொணடதென்னே"

என்று திரவிடசுருதியிலும,

"எல்லார்பிறப்புமியறபாவலாதனு
சொலலாறறெறிநதோனுசோணை - னில்லிற
பிறநதகதையுநகேளேமபேரு லகிலவாழ்ந்துண
டிறநதகதையுநகேட்டிலேம' எனறு குகநமசிவாயயோகி வெண்பாவிலும கேட்கபபடுதலைககொணடும உணாக

### தாத்பர்யம்.

ஹரி யோனிவாயில பிறபடவன, ஹரன யோனிவாயில பிறவாதவன் எனபதாம.

### தாரதம்மியம்

இவ்வுலக ததிற பலதரய நிலையாறி வருடவனைவிட ஒரேரீதியாக இருப்பவனைச் சிறடபாக மதிக்கினறாகள ஹரி பலமாதாகளின யோனிசமபநதமாகப் பிறநதிருததல பாகவத முதலிய மஹா நூல்களிலும், அவவாரியி னன்பாவாககியஙகளிலும கேட்கப்படுதலால், ஹரி பிறப்புள்ளவனென்று பிரசித்திபெறறவன். ஹரனோ நிலைமாறுததன் மையனுகி மிருத்துஞ்சயனென்று யதாாதத நாமமடைந்து சுருதியாதிகளாலும், அன்பர் வாக்கியங்களாலும் பிறவியற்றவனென்று பிரசித்தியடைந்திருக்கின்றனன். இவ்விஷயத்தி லிவ்விருவர்களில் ஹரன் உயர்ந்தவனும் ஹரி தாழ்ந்தவனும் என்று ஸ்பஷ்டமாக விளங்குத

லால், நாங்கள் பிறப்பினால் தாழ்வடைந்த ஹரியை, பிறப்பில்லாதவனாகிய ஹரனைவிட தாழ்ந்தவனென்றறிந்து அபயிப்ராயமாக அகற்றி இவ்விஷயத்திற்சிறப்படைந்த ஹரனை அடைந்து வணங்குகின்றோம்.

> ஏகோ ஹ்யுலூகலநிபத்த இதி ப்ரஸித்திம்
> ஸ்த்வந்யோ பபூவ பவபாசவிமுக்திதக்ஷ:।
> கோவாநயோ ரதிக இத்யநிரூப்ய ஸா
> ஸத்யம் பவந்து தமிமம் வயமாஸ்ரயாம:॥

ஏகோஹ்யுலூகலநிபத்த இதி ப்ரஸித்திம் ஸ்த்வந்யோ பபூவ பவபாசவிமுக்திதக்ஷ:। கோவாநயோ ரதிக இத்ய நிச்சித்ய புருஷாஸ்ஸத்யம் பருவந்து தமிமம் வயமாஸ்ரயாம:॥

## மொழிபெயர்ப்பு

அறைபுங் கடனீர் வைப்பினிடை யறைவா ரொருவ னாகுடிற்
கறையிற் கட்டுண் டானென்னக் கருது மொருவன் கருவினிடை
உறையும் பந்த வியல்பதனை யொழிப்பா னாகி யொளிர்கின்றான்
இறைவ னிவரி லெவனென்ன விசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.

## பதப்பொருள்

| | |
|---|---|
| ஏக: | ஒருவன் |
| உலூகலநிபத்த: | உரலில் கட்டிப்போடப்பட்டவன் |
| இதி | என்று |
| ப்ரஸித்திமஹி | ப்ரஸித்தி யடைந்தானல்லவா, |
| அந்ய: து . | இன்னொருவனால் |
| பவபாசவிமுக்திதக்ஷ: | ஸம்ஸாரபந்தத்தை விடுவிக்கிறதில் சமர்த்தனானவனாக |
| பபூவ | ஆனான் |
| விபாதி | ப்ரகாசிக்கின்றான்; |
| அநயோ: | இவ்விருவருக்குள் |
| அதிக: | சிறந்தவன் |

| | |
|---|---|
| கோவா | எவன்? |
| இதி | இதனை |
| அநுசிந்தியா | ஆலோசித்து |
| வ்ருத்தா: | பெரியவர்கள் |
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம் |
| தமிமம் | உங்களா லுயர்ந்தவனென்று கூறப்படுகிற அந்த இவனை |
| வயம் | நாங்கள் |
| ஆஸ்ரயாம: | ஆஸ்ரயிக்கின்றோம் |

## பொழிப்பு

ஒருவன் உரலிற் கட்டப்பட்டவனென்று பிரசித்தி யடைந்தவன ல்லவா, இன்னொருவன சமுசாரபந்தத்தை விடுவிக்கிறவனாக ஆனான்; இவ்விருவருக்குள் சிறந்தவனென றுள்ளவனை இவனென்று அறிவுடைய நீங்கள் கூறுவீர்களானால், நாங்கள் அந்த மகாபுருஷனைச் சரணமாக அடைகின்றோம்

## விசேஷம்.

ஒருவன உரலில் கட்டப்பட்டானென்றது-ஹரியை, அது அவ் வரி அவ்வண்ணங் கட்டுண்டமையால்.

ஹரி கண்ணனாகப்பிறந்து இடையர் குடியில வளர்ந்த வஞ்ஞான்று ஒருதினம் தனது மாதாவான அசோதையின் மடியிலிருந்து பாலுண்டனன். அப்பொழுது சமையற்கொட்டிலிற் பாற்றாழி பொங்கிப் பால் நெருப்பில் விழுந்த நாற்றமறிந்து அசோதை பால்கொடுப்பதைவிட்டுப் பானெருப்பை யவிக்கச்சென்றனள் உடனே தனக்குப் பால்கொடாமற் சென்றன ளன்னையென்னுங் கோபத்தா லெதிரிற் கடைதற்கு வைத்திருந்த தயிர்த்தாழியைக் காலாலுருட்டி யுடைத்துவிட்டு, வேறொரு குடிலுள் நுழைந்து அங்கொரு கல்லுரலைக் கவிழ்த்து அதன்மீதேறி யுயரத் தொங்கிக்கொண்டிருந்த உறியிலிருந்த கலசத்தைப் பொத்தலாக்கி அதனிலிருந்த வெண்ணெயை யெடு

த்து இரண்டு கைகளிலும் வைத்துத் தின்றுகொண்டிருந்து, பூனை களுக்குங் கொடுத்தனன் இதற்குள் பாலடுப்பின் நெருப்பை அளவு படுத்தித் திரும்பிய யசோதை தயிர்த்தாழி யுடைந்திருத்தலைக்கண்டு இது கண்ணன்செய்த வேலையேயன்றி வேறில்லையென்று கருதித் தேடி யறைக்குள் நிற்பவனது சிறு குறும்பைக்கண்டு கோபங்கொண்டு, உன்னைத் திருடனென்று அயற்குடிகளிலுள்ள இடைச்சிகள் கூறியதை மெய்யல்லவென்று கருதினேன், நீ திருடனென்பதை இன்று அறிந்தேன், இனி யுன்னை விடமாட்டேன், திருட்டுச்சிறுவா, இங்குவா இங்குவா என்று துரத்திப்பிடித்து ஒரு உரலினைக்கவிழ்த்துத் தன் நடுவிற்கும் இவனிடுப்பிற்குமாக ஒரு தாம்பினை இட்டுக்கட்டி உரலோடு நகருமாறு வைத்தனள் இதனை—

"அரிவையாகளமிகநகைக்கயசோதைநங்கை
யாயாமனைத்தாமப்பெல்லாமுடிந்தொன்றாக்கிக்
கரியவனைக்கட்டுதலும்போதாதாகிக்
கைசலித்துமெய்வெயர்வுசொரியக்கண்டு
வனையினமாயோகிகட்குமறைநாலுக்கும்
வானவர்க்குமவாசவாக்குமலரினவந்த
பிரமனுக்குமகப்படாப்பெரியோன்றுய்கைத்
தாம்பினலுலூகலத்திறப்பிணிப்புண்டானுல" என்று பாகவ

தத்தில் வருதலைக்கொண்டுணர்க

ஒருவன சமுசாரபந்தத்தை நிவிர்த்திப்பதில பிரசித்தியடைந்தவனென்றது - ஹரனை, அது அவ்வரன அவ்வண்ண மநேகர்களின சமுசாரபந்தத்தை நிவிர்த்தித்தமையால்

ஸ்ரீகைலாசத்திலே வடவாலநிழலிலே ஞானசாரியனாக வீற்றிருந்து ஜனகன் முதலிய வனேகர்களின பந்தங்களை நிவிர்த்தித்த பரமாசாரியனென்றும், இன்னும் பந்தநிவர்த்தியையடைய விரும்பின பக்குவர்களனைவரும அவ்வரனையே சரணமாக வடையவேண்டுமென்றும் வேதாகமாதி நூல்கள் கோஷிக்கின்றன. இதனை—

देवदेवो महाप्राज्ञः पापघ्नः पुण्यवर्धनः । सं[illegible]
[illegible] । ब्रह्मावते

## பதப்பொருள்.

| | |
|---|---|
| ஏகஸ்து | ஒருவனானவன் |
| அநித்யஃ | அநித்தியன் |
| இதி | என்று |
| ஜகத்யாம் | லோகத்திலே |
| ஸுப்ரதித | நன்றாகப் பிரசித்தி அடைந்தவன், |
| அந்யஸ்து | இன்னொருவனோவென்றால் |
| நித்யஃ | நித்தியன் |
| இதி | என்று |
| ஸ்ருதிஷு | சுருதிகளிலும் |
| லோகேஷு | லோகத்திலும் |
| ப்ரஸித்தி | கீர்த்தி |
| அஸ்தி | இருக்கின்றது, |
| அநயோஃ | இவ்விருவருக்குள் |
| அதிகஃ | சிறந்தவன் |
| கோவா | எவன்? |
| இதி | இதனை |
| அநுசிந்த்யா | ஆலோசித்து |
| வ்ருத்தாஃ | பெரியவர்கள் |
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம் |
| தமிமம் | அந்த இவனை |
| வயம் | நாங்கள் |
| ஆஸ்ரயாமஃ | ஆஸ்ரயிக்கின்றோம் |

## பொழிப்பு.

ஒருவன் அநித்தியனென்று லோகத்திலே நன்றாகப் பிரஸித்தியடைந்தவன், மற்றொருவன் நித்தியன் என்று நன்றாகப் பிரஸித்தியடைந்தவன்; இவ்விருவருள் சிறந்தவனை அறிவுடைய நீங்கள் சொன்னால் நாங்களந்த மகாபுருஷனைச் சரணமாக அடைகின்றோம்.

## விதப்பு

ஒருவன அநித்தியனென்றது-ஹரியை, அது அவ்வரி அநித்திய த்துவத்தை யடைதலால

ஹரி இராமன கிருஷ்ணன்முதலிய அவதாரங்களை அடைந்திரு ந்து இறந்தனன என்று கேட்கப்படுதலால, அநித்தியன ஆயினன், நிலையற்றவனாயினனே அநித்தியனென்று கூறுவது நூல்

ஹரி கிருஷ்ணாவதாரமடைந்து துவாரகையிலிருந்து கடைசியில் சரமனெனனும் வேடனொருவன விட்ட அம்பினால கிருஷ்ணரூபத்தி னின்றும் அநித்தியமடைந்தானென்றும், இறந்த கண்ணனுடைய சரீ ரத்தைப பார்த்தனமுதலியவர்கள் தீயிலிட்டுச சுட்டனரென்றும், அவ னுடன் அவன மனைவியரான உருக்குமணியாதியர் உடன்கட்டையே றினாகளென்றுங் கேட்கப்படுதலாலும், இராமனாகப பிறந்த ஞான்று சரீரத்தை சரயுநதி நீரில மூழ்கவிட் டவ்வுடலினின்றும அநித்திய மடைந்தானென்றுங் கேட்கப்படுதலாலும், ஹரி அநித்தியமானவ னென்று அறியப்படுகின்றான். இதனை—

"மேதகுபுகழுடைவிதாப்பனபாவையே
ஆதிநனமடந்தையரழலினமூழ்கமற்
றேதமினமடந்தையாயாருமீறிலா
நாதன்மெய்யொடுதழனண்ணினாரே" என்று பாகவதத்தும்,

"துன்னியவானவர்துயரநீக்குவான
மன்னியவுலகினிற்பிறந்தமாயையைத
தன்னிகரிலாதவசசரயுநீத்துத்தன
பின்னவர்தம்முடன்பெயாததமேவினன்" என்று இராமாய ணத்தி லிராமன் தன்னுடம்பைச் சரயுவிலமிழ்த்தி வேறுடம்படைந் தானென்றும் கேட்கப்படுதலாலும், ஹரி அநித்திய இயல்பினனென் றறியப்படுகின்றான்.

ஒருவன் நித்தியனாகவிருக்கின்றான் என்றது-ஹரனை, அது அவ் வரன் அச்சுமாறுதிருத்தலால். மிருத்துஞ்சயன் என்று ஹரன் பெய ரடைந்திருத்தலும் அழியாமையினாலன்றே. இதனை—

" இந்திரியவயமயங்கியிறப்பதற்கேகாரணமா
யந்தரமேவீழ்ந்துபோயருநரகில்வீழ்வேற்குச்
சிந்தைதனைத்தெளிவித்துச்சிவமாக்கியெனையாண்ட
வந்தமிலாவானந்தமணிகொடில்லைக்கண்டேனே ' என்று தமிழ் வேதத்தும்,

நப்ரஹ்மா நப்ரஹ்மவிஷ்ணோ நாஹி நித்ய ப்ரபஞ்சஸாக்ஷீ ஶிவ:
என்று மைத்திரேயோபநிஷத்திலும்,

" அத்தனுமபகவனாருளுமருவமுமுருவுமாகுஞ்
சுத்தனுமுணர்தற்கொண்ணாச்சோதியுமியாண்டுமேவுஞ்
சித்தனுமநாதிதானுந்தேவாகடேவுமென்று
நித்தனுமுயிர்க்குணர்ங்கருத்தனுமவனேயென்னும்" என்று கந்தபுராணத்திலும் வருதலைக்கொண்டுணர்க

**தாத்பர்யம்**

ஹரி அநித்தியன், ஹரன் நித்தியன் என்பதாம்

**தாரதம்மியம்.**

அழியுமியல்பினை யுடையவனைக்காட்டிலும் அழியாவியல்பினை யுடையவன் சிறந்தவனென்பது லோகப்பிரஸித்தம். ஆதலால் நாங்களும் அநித்தியமான இயல்பினையுடைய ஹரியைவிட நித்தியமான இயல்பினையுடைய ஹரனைச் சிறந்தவனாக அறிந்து அநித்தியமான ஹரியைஅப்பிரதானமாக இவ்விஷயத்திலொதுக்கி நித்தியமான இயல்பினையுடைய ஹரனை பிரதானமாக நியாயமுகத்தாற்கொண்டு வணங்குகின்றோம் (உ௫)

ஏகஸ்த்வம் பூர்வமாஜிக்ருதோத்பவாஸ
ஸ்ருஷ்டிஸ்தித்யாதிஸம்ஹாரப்ரணாதப்ரபாவ:।
கோவா நயோ யி கஜத்ருநாவிஷ்ணுவ்ருஜா
ஸத்ரும்ருகாவஷாதஸம்வயமோருயாம:॥

ஏகஸ்துபார்த்தரதவாஜிக்ருதோபசாரஸ்தவந்யஸ்துபார்த்தஸம
ரப்ரணுதபரபாவஃ।கோவாநயோரதிகஇதயநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்ய
ம்ப்ருவந்துதமிமமவயமாஶ்ரயாமஃ॥

### மொழிபெயர்ப்பு

குநதி மகாரிற பாாததனறோக குதிரைக குபசா ரகனாகி
யிநத வுலகி லுறுமொருவ னினனு மொருவ னிவவிசையன்
பநத மரிற றுதிபுரியும பானமை யுடையா னினனவரில [மே.
எநத வியலபோன சிறநதவனென் றிசைததாற பெரியீ ரிறைஞ்சுது

### பதப்பொருள்

| | |
|---|---|
| ஏகஸது | ஒருவனுல |
| பாாததரதவாஜி கருதோபசாரஃ | அருசசுனன தேரிறகட்டப்பட்ட குதிரைகளினபொருட்டு செய்யப்படுகின்ற உபசாரததினை யுடையன, |
| அநயஸது | இன்னொருவனுல |
| பாாததசமர ப்ரணுதப்ரபாவ; | அருசசுனனேடே யுததததி லவனுல் துதிககபபட்ட மஹாதமியமுடையவன் ; |
| அநயோஃ | இவவிருவருககுள |
| அதிகஃ | சிறநதவன |
| கோவா | எனை? |
| இதி | இதனை |
| அநுசிந்தியா | ஆலோசிதது |
| வ்ருத்தாஃ | பெரியவாகள |
| ஸத்யம் | உணமையை |
| ப்ருவந்து | சொலலலாம. |
| தமிமம் | அநத இவனை |
| வயம் | நாங்கள் |
| ஆஶ்ரயாமஃ | ஆஶ்ரயிக்கின்றோம். |

### பொழிப்பு.

ஒருவன் அருச்சுனன் தேர்க்குதிரைகளுக் குபசாரம் செய்யுமவனாக வுள்ளவன், இன்னொருவன் அந்த அருச்சுனனேடு செய்த யுத்த

த்தில் அந்த அருச்சுனனால் துதிக்கப்பட்ட பிரதாபமுடையவன்; இவர்க ளிருவரில் சிறந்தவன் இவனென்று பெரியவர்களே நீங்கள் சொல்லுவீர்களானால், நாங்கள் அந்த மஹாபுருஷனைச் சரணமாக வடைகின்றோம்

## விதப்பு

ஒருவன் பார்த்தனுடைய தோக்குதிரைகளை உபசரிப்பவனென்று கூறியது - ஹரியை, அது அவ்வரி அவ்வாறு செய்திருந்ததலால்.

பாரதயுத்த நடந்தகாலத்தி லருச்சுனனுக்குச் சாரதியாக இருந்து தேரோட்டின காலத்துக் குதிரையவிழ்த்து நீரூட்டல் முதலிய காரியங்களை ஹரி செய்தானென்று பாரதாதிகளாற பிரசித்தம இதனை—

" தலமாமகளுந்திதடநிகரானதடங்கண்
மலமாறுகொளிருதோள்வலியுடைவள்ளலுழைப்பக
குலமாமணியனையான்விரைதோநின்றெதிருகுதியா
வலமானதுரங்கங்களைவள்வாவிசிசெகிழா என்றும,
குவளைப்பரிமளமேவியகுளிர்வாரிபருககிவ
பவளத்துயாவாயாரிருபாதங்கைவிளக்கித
தவளக்கிரியொருநாலெனமேனமேலொளிதருபே
ரிவுளிக்குமினைபபாறவினைப்பாறினனிபபால" என்றும ஸ்ரீமகாபாரதத்தில வருதலைககொணடுணாக

ஒருவன பாரதானுடன யுத்தஞ்செய்து அவனால் துதிக்கபபெற்றவனென்றது-ஹரனை, அது அவர னவ்வாறு துதிக்கப்பெற்றமையால்.

ஹரன பாசுபதாஸ்திரத்தின்பொருட்டுத் தவஞ்செய்து நின்றவருச்சுனனுடன பன்றியினிமித்தம சண்டையிட்டுக் கடைசியி லவ்வருச்சுனனால் துதிக்கப்பெற்றான. இதனை—

கபர்தி ந்நுலபெதெவெமஹமெந்த நிபாதந । தெவ
தெவமஹாதெவ நீல ஜ்ரீவஜடாதர । காரணாநாஞ்ச பரமெஜா
நெதுாம் த்ரியம்பகம்விஷம்'' என்று ஸ்ரீமஹாபாரதத்தில் கேட்கப்படுதலாலும்,

" மல்லமர்தொடங்கியிவரிருவரும்வெகுண்டுபொரமாதிரமுமா நிலமுமே,விலலையுமதிரநதுசுழல்கின்றபொழுதத்திமையவின்பமயில் கேள்வனவெகுளா,நல்லசைபுனைந்தமணிநூபுரவிசாலவொளிநண்ணு பதநாணமலரினால, வில்லியரிலெண்ணுதிறல்வில்லுடையகாளைதனை விணணுலகிலவீசினனரோ எனறும்,

ஆதியேயண்டமுமனைத்துமாயொளிர
சோதியேகொன்றையந்தொஙகனமௌலியாய்
வாதியேமரகதவல்லியாளொரு
பாதியேபவளமாமபரமரூபியே என்றும்,

பையராவணிமணிபபவளமேனியாய்
செயயவாய்மரகதசசெலவிபாகனே
பையனேசேவடியடைநதவாகசெலா
மெயயனேயெஙகுமாயவிளஙகுசோதியே '' என்று அருச்சுனன சணடையிற் றுதிததானென்று பாரதங கூறுதலாலு முணாக.

## தாத்பரியம்.

ஹரி பாரததன றோக்குதிரைகளை யுபசரிததவன, ஹரன பாரததனால் துதிககபபெறறவனெனபதாம.

## தாரதம்மியம்.

தனனிலையைவிட்டுத தோப்பாக னுருவையடைநது ஒருவனுடைய குதிரைகளை நிரூட்டன் முதலிய வுபசாரஙகளினாலே மகிழ்விப்பவனைவிட, ஒருவனோடு போரபுரிநது மறுதலையாற் றுதிக்கப்பெற்றவன் சிறந்தவன் இம்முறையி லரி அருச்சுனனுடைய சாரதியாக நின்று அவன் குதிரைகளை யுபசரிததமையால தாழ்ந்தவனாயினன், ஹரன் அந்தப்பார்த்தனுடன் சண்டைசெய்து அதே பார்த்தனாற் புகழப்பெற்றமையாற் சிறப்படைந்தான்; இதனால் தாழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாக அகற்றி உயர்வடைநத ஹரனை நாங்கள் சரணமாக அடைந்து வணங்குகின்றோம். (உ௬)

[illegible]
[illegible]

[Grantha verse]

ஸ்ருத்ஸ்ருதவய்ம்வய்க்ததேவமயவஸ்யா௱॥

வ்யாப்தஸ்ச விஷ்ணுரயமி த்யவகமய ஏகோ அநயோ விஷ்ணுவல்லபஇதிப்ரதிதஸ்த்ரிலோகயாம । கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸஸ்தயமபருவந்து தமிமமவயமாஸரயாம:॥

## மொழிபெயர்ப்பு

மண்டுந் தவள வளைதரள மணிக ளிறைக்கு மாநிலத்தில
விணடு வென்னும பெயருடனே விளஙகு மொருவன வேறொருவன்
அணடு மனனுன வலலவனென ாறையும பேரொ டாகினமுன
எணடின றிவரிற் சிறந்தவனயா ரிசைத்தாற பெரியீ ரிறைஞசு நூமே.

## பதப்பொருள்

| | |
|---|---|
| ஏக: | ஒருவன |
| அயம் | இநத |
| விஷ்ணு | விஷணுவானவன |
| வயாப்த | வியாபிததிருககினறுன |
| இதி | என று |
| அவகமய | அறியப்படுகினறுன், |
| அந்ய: | இன்னொருவன் |
| விஷணுவல்லப: | அநத விஷ்ணுவுக்குப் பிரபு |
| இதி | என்று |
| த்ரிலோகயாம் | மூன்றுலோகங்களிலும் |
| ப்ரதித | ப்ரசித்தியடைந்தவன்; |
| அநயோ: | இவ்விருவருள் |
| அதிக: | சிறநதவன் |
| கோவா | யாவன்? |
| இதி | இதனை |
| அநுசிந்தியா | ஆலோசித்து |
| வ்ருத்தா: | பெரியவர்கள் |

| | |
|---|---|
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம |
| தமிமம் | அந்த இவனை |
| வயம் | நாஙகள் |
| ஆம்ரயாம: | ஆம்ரயிக்கின்றோம |

## பொழிப்பு

ஒருவன வியாபிததிருக்கின்றானெனறு அறியப்படுகின்றான், இன்னொருவனாந வியாபியாகவுள்ளவனுககுப் பிரபுவாகவிருக்கின்றான், இவ்விருவாகளுட்சிறந்தவனை இவனென்று அறிவுடைய பெரியவாகளாகிய நீஙகள சொனனால், நாஙகளநத மஹாபுருஷனைச்சரணமாகவடைகின்றோம

## விதப்பு

ஒருவன விஷ்ணு வியாபிததிருககின்றான என்று கூறியது - ஹரியை, அது அவ்வரி அனைறு வியாபிததிருததலால்

விஷ்ணுவெனறும பெயா அரிககு வியாபகததா லுண்டாயதே யாம இதனை,—

"எனறுஞசாணையெதிா்நோக்கியிரஙகவென்னின
மன்னுமுலகிலுயிரொஙகுமவதிநதுளேன்மற்
றுன்னினுறைந்துவினைசெய்யவுஞறறினேனயான்
பொன்னின்றிலஙகுமுலகெய்ததிட்டோதியெனறான்" எனறு ஸ்ரீ பாகவததததில் ஹரி தனனை வியாபகனென்று உணாததிருபபதாக விருக்கும் மேற்காட்டிய செய்யுளாலும,

ஸுஹரிணை ப்ராவிஷ்ணுராது ப்ராணதம் என்று ஆத்மபோதோபநிஷததில கேட்கபபடுதலாலும,

"திடவிசும்பெரிவளிநீர்நிலமிவைமிசை
படர்பொருள்முழுவதுமாயவையவைதொறும்
உடன்மிசையுயிரெனக்கரந்தெங்குப்பரந்துளன்
சுடர்மிகுசுருதியுளிவையுண்டசுரனே" என்று நாலாயிரப்பிரபந்தத்தும் வருதலைக்கொண்ணோர்க.

ஒருவ னவ்விஷ்ணுவுக்குப் பிரபு என்றது - ஹரனே, அது அவ்வ ரன் ஹரிக்குப் பிரபுவாகவுள்ளவனென்று கேட்கப்படுதலால். இதனை,

ஹத்ரு ப்ரநத்ருதமோ விஷ்ண ருஸாதிகேமோாஹஙீ

என்றுபநிடதத்தும்,

"விசசுவன்சிறைப்புள்ளரசுயாததவனவிளமபும
விச்சுவாதிகனெறுழவலிசசினவிடையூாதி
யெச்சமேசுருமபுளாதுழாயலஙகலானெனப
வெசசநாயகனபொலநதுணரிதழிமாலிகையான்" என்று கா ஞ்சிப்புராணததும் வருதலேகொணடுணாக.

### தாத்பரியம்.

ஹரி வியாபகன, ஹரன அவ்வியாபகனுன ஹரிககுப பிரபு என்பதாம்.

### தாரதம்மியம்.

வியாபகனுகவுளளவன் சிறநதவன, அவனேவிட அவனுககுப் பிரபுவாகவுள்ளவன சிறநதவன, ஆதலால நாஙகள இவ்விஷயத்தில் தாழ்வடைந்த ஹரியை அபபிரதானமாக வொதுககிச் சிறந்த ஹர னைச் சரணமாக அடைநது வணங்குகின்ருேம —எ-று. (உஎ)

ஸமொஜநாஷஹஜிஷுகஷ்கத்தொய
கூ ஞுதஜஙஷுஸ்யஹிதஹி।
கொவாநயொாயிகஜக ப்ரூஙஷுகூஹா
ஹூதஹஷஷஹஙமமரமயாமி॥

ஏகோஜநாா ததநஇதிப்ரகடீக்ருதோயமங்யஸதுமங்கரஇதிஸ்புட மீர்யதேஹி। கோவாநயோரதிகஇத்யநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்யம்ப்ரு வந்துகமிமமவயமாம்ரூயாம॥

### மொழிபெயர்ப்பு.

மலர்ப்பூஞ் சோலே வையத்து மன்னுஞ் சனுர்த்த னனென்ன
வலப்பார் பெயரை யார்க்கொருவ னுற்று னெருவ னுமையொருவன்
நலப்பா லுயிர்கட் கின்பமதைத் தருசங் கரனுத் தானிற்றுன்
எலப்பா லாவார் யாரிவரு ளிசைத்தாற் பெரியர் சிறந்தாரே.

## பதப்பொருள்.

| | |
|---|---|
| அயம | இநத |
| ஏக: | ஒருவன் |
| ஜநாரதநதந: | ஜனங்களைப் பீடிக்கிறவன் |
| இதி | என்று |
| ப்ரகடீகருத | தெரிவிககபபட்டிருக்கின்ருன், |
| அநயஸது | இனனெருவனெனென்ருல் |
| சங்கர: | சுகததைப்பண்ணுகின்றவன் |
| இதி | என்று |
| ஸபுடம் | நிசசயமாக |
| ராயதேஹி | சொலலபபடுகின்ருனலலவா; |
| அநயோ: | இவவிருவருககுள் |
| அதிக: | சிறநதவன |
| கோவா | யாவன? |
| இதி | இதனை |
| அநுசிநதியா | ஆலோசித்து |
| வ்ருததா: | பெரியவாகள |
| ஸதயம | உணமையை |
| ப்ருவநது | சொலலலாம |
| தமிமம | அநத இவனை |
| வயம் | நாஙகள |
| ஆம்ரயாம: | ஆஸரயிககின்ருேம. |

## பொழிப்பு

ஒருவன் ஜனார்த்தனனெனறு தெரிவிக்கப்பட் டிருககின்ருன், இனனெருவன் சங்கரனென்று நிசசயமாகச் சொலலப்படுகிருன்; இவாகளுட் சிறந்தவனை இவனென்று பெரியவர்களாகிய நீங்கள் சொன்னுல், நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாகஅடைந்து வண ங்குகின்ருேம்.

## விதப்பு

ஒருவனை ஜநார்த்தனனென்றது-ஹரியை, அது அவ்வரி ஜநார்த்தனனாக நின்றமையால் ஜநார்த்தனன் என்றால ஜனங்களைப் பீடித்தவனென்று பொருள் ஆகும்.

ஹரி, ஜகத்பிரசித்தனாகவிருந்த மாவலி மன்னனது யாகசாலைக்குட்புகுந்து மூவடிமண் கேட்க, அவனவ்வாறே கொடுக்க, அவனை வஞ்சிக்குமாறு பேருருவடைந்து ஈரடியாலே மூவுலகளந்து மற்றோரடிக்கவன் தலைமீது காலைவைத்து அவனைப் பாதலத்திலிருக்குமாறு செய்து பின்னர் செருக்குந் தருக்கும் பொருந்தி யிவ்வுலகத்தினை யழிக்க நிமிர்ந்து நின்றனனென்றும், இரணியனைக் கொல்லுமாறு தூணினின்றும் வெளிப்பட்டு அவனைக் கொன்ற பின்னர் அவனுட விரத்தபானத்தால வெறியுற்று உலகத்தை யழிக்க முயன்று நின்றனனென்றும், அப்பொழுது ஜனங்கள் கஷ்டத்தை யடைந்தார்களென்றும், சோமுகன் பொருட்டு மீனுருவடைந்தபொழுது, கடலைக் கொந்தளிக்கச்செய்து உபத்திரவித்தமையால, ஜனங்கள் வருந்தினார்களென்றும், அமிர்தமதனத்தினிமித்தம் ஆமையுருவடைந்தபோது கடற்கரையைப் பேதித்து நின்றமையால, ஜனங்கள் வருந்தினார்களென்றும் கூறுமிவைகளால ஜநார்த்தனனென்று ஹரிக்குப் பெயராகியது. இதனை—

“ஈரொயிற்றசுரர்கோமானமாவலியென்போன்றன்னைக்
காரகப்படுத்திமற்றைக்கடிகமழலங்கற்குலலைத்
தாரகப்படுத்தமாயோனதனனிகரின்மைநோக்கிப்
பேரகலண்டமெல்லாமபிளப்பதற்குருத்துநின்றான்” என்று வ-

ரும ஸ்காந்தபுராணத்தும்,

“எண்ணில்கோடிசிரங்கள்கரங்களிலங்கவுலப்பிலதாங்
கண்ணிறைதீயுலகெங்கும்வளர்ந்திடமூச்சுமிழ்காலறைய
மண்ணொடுவிண்ணினைநுகரவிரித்திடுவாய்புகையாயெழவே
விண்ணவர்முனிவரலைந்துநடுங்கினர்மேவவுமிடமிலதாய்” என்

று பாகவதத்தும் வருதலாலுணர்க.

ஒருவன் சங்கரனென்று பிரஸித்தியானவனென்றது - ஹரனை, அது அவ்வரன் அவ்வாறு ஜீவர்களுக்கு இன்பங் கொடுக்கின்றவனாதலால்.

சங்கரன் - சுகத்தைச்செய்பவன். ஹரியடைந்த அகம்பாவமுதலியவைகளாலும், ஆலாலவிஷமுதலியவைகளாலும் ஆன்மகோடிகளுக்குண்டான துன்பங்களை ஹரனகற்றி இன்பத்தை யுண்டாக்கினனென்று நூல்களில் விஸ்தாரமாகக் கேட்கப்படுகின்றன. இதனை—

ஶங்கரோ ஹ்யேவ நாமைஷ ப்ராணிஸுகஸ்ய ப்ரஜா: என்

னும் பைப்பலாதச்ருதியாலும்,

"இன்பந்தருவன்குயிலேயேழுலகும்முழுதாளி
யன்பனமுதளித்தூறுமானந்தன்வான்வந்ததேவன்
நன்பொன்மணிச்சுவடொத்தநற்பரிமேல்வருவானைக்
கொம்பின்மிழற்றுங்குயிலேகோகழிநாதனைக்கூவாய்" என்னுந்

தமிழ்வேதத்தாலும், இதர நூற்பிரமாணங்களாலும் உணர்க.

**தாத்பரியம்**

ஹரி ஜனங்களை வருத்தி ஜனார்த்தனனானன், ஹரன் ஜனங்களைச் சுகப்படுத்திச் சங்கரன் ஆனான் என்பதாம்.

**தாரதம்மியம்.**

ஜனங்களைப் பீடிப்பவனைவிட ஜனங்களைச் சுகப்படுத்துபவன் சிறந்தவனாதலால், நாங்களும் சனங்களைப் பீடிக்கிற ஜனார்த்தன நாமனான ஹரியை அப்பிரதானமாக வகற்றிச் சனங்களுக் கின்பத்தைக் கொடுக்கின்ற ஹரனைப் பிரதானமாகக்கருதி வணங்குகின்றோம். ()

**[illegible]**
**[illegible]**
**[illegible]**
**[illegible]**

பக்தம்பலிம்புநரத:க்ருதவாநிஹைகோபக்தம்குபேரமகரோததிக ஸ்ரீயாந்ய: । கோவாநயோரதிகஇத்யநுசிந்த்யவ்ருத்தாஸ்ஸத்யமப்ருவந்துதமிமமவயமாஸ்ரயாம ॥

## மொழிபெயர்ப்பு

தன்றாள் வணங்கும பலிதன்னைத தாைகீ ழாரத தாளுன்றி
நின்று ஞெருவன் மற்றொருவன் நிகரி லடியை நேசிதத
குன்று வியலான் றனைவசுவிற் குறையாக் குபேர னுககினன்
என்று லிவருட் சிறந்தவன்யா ரிசைததாற் பெரியீ ரிறைஞசுதுமே.

## பதப்பொருள்.

| | |
|---|---|
| ஏக:புநஃ | ஒருவனானவ |
| பக்தம் | பகதனை |
| பலிம | பலியை |
| இக | இந்த உலகததில் |
| அத:க்ருதவாந் | கீழே போகசசெயதான, |
| அந்ய: | இன்னொருவன |
| பக்தம் | பக்தனை |
| குபேரம் | குபேரனை |
| அதிக: | மிகுதியான |
| ஸ்ரீயா: | சம்பததுடையவனாக |
| அகரோத் | செய்தான் ; |
| அநயோ: | இவ்விருவருக்குள் |
| அதிக: | சிறநதவன் |
| கோவா | யாவன் ? |
| இதி | இதனை |
| வ்ருத்தாஃ | பெரியவர்கள் |
| அநுசிந்தியா | ஆலோசித்து |
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம், |
| தமிமம் | அந்த இவனை |

வயம — நாஙகள

ஆஶ்ரயாமः — ஆஶ்ரயிககின்றோம

### பொழிப்பு

ஒருவன அனபனுன மாவலியை இந்த உலகதசிற் கீழே போகச் செயதான், இனனொருவன அனபனுன குபேரனை மிகுதியான சமபததுடையவனுகச செயதான, இவவிருவரிற் சிறநதவனைப் பெரியவா களான நீஙகள உணமையாகச சொன்னுல, நாஙகளநத மஹாபுருஷ னைச சரணமாகவடைநது வணஙகுகினறோம

### விதப்பு

ஒருவன பகதனுன பலியைக கீழேபோகசசெயதானெனறது - ஹரியை, அது அவவரி அவவாறு செயதமையால

மாவலி ஹரியினிடசது அனபுளளவன, இவன தனது குலபபகை ஞாகளாகிய தேவாகளிடததிலனறிப பிறரிடததி லதிக பிரியமுடை யவனுகவிருநதவன. அவனொருகாலததி லொரு யாகஞசெயய வுததே சிதது யாகாரமபஞசெயது யாகம நடததிககொணடிருககுஙகாலததுத தேவாகளின துணபுதலா லரி யொரு குளளபபிராமணப பிரமசாரி யாய் அமமாவலியின யாகசாலையை யடைநதனன. உடனே யாக தீக்ஷையுடனிருககும பலிசசககரவாததி வநத வநதணனை யுபசரிதத னன. அப்பொழுது அந்தணனுகிய ஹரி நானினனை வெகு நலலவ னெனறு கேளவியுறறு வநதேன, வநத எனககுத தவமியறறவிருதத ற்கு மூனறடிமண வேண்டும, நீ தருதியோவென, அனறேன் அவ் வாறே தருகினறேனென் றுரைததுத தாரைவாாததனன. தாரை நீரைக் கையிலேறறவுடனே குள்ளனுக நின்ற ஹரி நீணட வுருவு டையனுகித் தனதிரணடு காலடிகளால் மூவுலகங்களையும அளந்து மூன்றுவதடி மண்ணெங்கென்றதற்கு, மாவலி அண்ணலே! மூன்று வதடிக்கிடம என்றலை என்றுரைத்து வணங்கினன். பின்ன ரம்மா யோ னவனை வருணபாசத்தாற் கட்டி வருத்தினன். இதனை யுணர் ந்துவந்து துதித்த பிரகலாதன்பொருட்டு அம்மாவலியை விட்டு இனி

நீ இங்கிராதே கீழுலகத்திலிரு என்று அவனைக கீழ்நிலையில் இருக்குமாறு புரிந்தனன். இதனை—

" உரவுநீருலகமெல்லாமோரடியாயதோஙகும
இருவிசுமபடியொன்றாயதேனையோரடிமறறெஙஙன்
தருதிநீதாராயென்னிறசாகுவைநரகமெனறு
வருணபாசததால்வீககமாவலிகடடுணடானல.

குருவெகுண்டதனறபுனகணகுறுகினனபோலுமென்னப்
பிரகலாதபபேரணபன்பெருமனைககணடுநெஞசம
உருகுறபபுளகமெயதியுவப்பினோடேததாநிறப
மருவிரிதுளவமாலைமலரவனவழுததிசசொலவான.

உன்பதநீரினட்டியுற்றநீாதலையிறறாஙகி
மன்பெருஞசெல்வமெல்லாமவழஙகுமாவலிதானெனறும
இன்பமேபெறுதலலலாலிடருறறகியாவனகொல்லோ
அன்பனெனறுனாததுபபாசமவவழிநீக்கினனல

வீககியவருணபாசமவிட்டொழிநதவுணாவேநதன
மாககணவெமமுலையாளசெயயமலாமகளகொழுநபச்சைத
தேககமழ்துளவததாரோயசெப்புமோரடியெனசென்னி
மீககணவைததளததியென்னவிமலனங்குவநதுவிள்ளும" என்று பாகவதததும,

" மன்னிலங்குபாரதததுத்தேரூாநதுமாவலியைப்
பொன்னிலங்குதிண்விலஙகிலவைததுப்பொருகடல்சூழ்
தெனனிலஙகையீடழிததேவாககிதுகாணீா
என்னிலங்குசங்கோடெழிலதோற்றிருநதேனே"என்று நாலாயிரப்பிரபந்தததும வருதலைககொணடுணாக.

ஒருவன் பத்தனன குபேரனைச் சகலசம்பததும் உடையவனகச் செய்தானென்றது - ஹரனை, அது அவ்வரன் அவ்வாறு தன் பத்தனன குபேரனுக்குச் சகல செல்வங்களையுங் கொடுததலால்.

விஶ்ரவஸ் மகரிஷியின் சந்ததியான 'வைச்ரவணன் என்னும் குபேரன் சிவதீக்ஷையுடன் சித்தவடமென்று வழங்குகின்ற சித்தவட

க்ஷேத்திரத்தில ஹரனை வழிபட்டு அன்புபாராட்டிப் பூசித்தனன். அவனன்புகக்கிரங்கிய ஹரன் அவனுக்கு வடதிசையின் ஆதிபத்தியமும, நவநிதி நாயகத்துவமும, யக்ஷாதிபதித்துவமும, நரவாகனமும், இன்னம வேண்டிய ஆயுதவாகனாதிகளும் அளித்தனன். இதனை—

ஸிஷேவ ஸ்வாமிநம் ஸிவம் ஸம்வத்ஸரஸஹஸ்ரகம்।
கௌபேர: ப்ரீயமாணஸ்து ப்ராதாத்தஸ்மை மஹேஸ்வர:।
உத்தராஸாபதித்வஞ்ச ஐஸ்வர்யஞ்சைவ ஹந்தவச।
நிதீநாம் நவாநாம் ஆதிபத்யம் யக்ஷக:।
விமாநம் புஷ்பகம் சைவ ஸாம்ப்ரதம் வாஹநம்।
நரயுக்தம் ... தத்தவாந்। என்று

சிவரகஸ்யகண்டத்தும,

"சித்தவடசிதசேசுராபொற்சேவடியெண்ணிப்
பத்திபயக்கசசென்றுகுபேரன்பணிதந்தான்
அத்தனையொககுநதோழமைகொண்டானருள்பெற்றுன்
நத்தமுதற்கோமாநிதியெலலாநணிபெற்றுன்.

எண்ணிநினைநதவரமபலயாவையுமெயதுற்றுன்
மண்ணியபுட்பகமவாகனமாகவழஙகுறறுன்
றிணணியவெங்கதையாயுதமெயதுசிறப்புற்றுன
அண்ணனெடுங்குடையுததரதேயமளிககினறுன" என்று கந்த புராணத்தும் வருதலைககொண்டுணாக.

## தாத்பரியம்.

ஹரி தன் பக்தனை பலியைக் கீழே தள்ளினன், ஹரன் தன் பக்தனை குபேரனை கௌரவப்படுத்தினன் என்பதாம.

## தாரதம்மியம்.

தன்னிடத்தி லன்புவைத்த வொருவனை எவ்வளவு தாழ்ந்த தன்மையி னிற்பவனும் வஞ்சித்துக் கீழ்ப்படுத்தமாட்டான். இது இவ்

வாறிருக்க, இவ்வரி தன்னை வழிவழி யடிமையாக வணங்கு மரபில் வந்தவனும நீதிமானுமாகிய மாவலியைக் கீழ்ப்படுத்தியது எவ்வளவும் உசிதமான விஷயமல்ல தன்னை வணங்கிய குபேரனுக்கு ஐசுவரியாதிகளை யளித்த ஹரன மாவலி விஷயத்தி விழிவுபுரிந்த ஹரியைவிட உயாநதவனெனபது சொலலாமலே யமைந்த விஷயம். ஆதலால அன்பன் விஷயத்திற கெடுதிபுரிந்த ஹரியை அப்பிரதானமாக அகற்றி அன்பன்விஷயத்தி லுயாவு புரிந்த ஹரனைச சிறந்தவனாக வறிந்து நாஙகளந்த ஹரனையே சரணமாக அடைநது வணஙகுகினறோம.

[illegible]

வ்யாதாதிநீசஹ்ருதஜைஜவதூகஏகோவ்யாதாயிதோபிநிகமஸ்ரவ பிராஞ்சதே[illegible]ய:| கோவாநயோரதிகஇதயநுசிந்தியவ்ருத்தாஸ்ஸதயம் ப்ருவந்துதமிமவயமாஸ்ரயாம:||

## மொழிபெயர்ப்பு

பண்டங கிளிமென் மொழிமனைமாா பலவை வியாதப் பாதகாகள்
கண்டங் கடையப பெறறவனுய கணடா னொருவன் கனையொருவன்
புண்டங்கிலவேடவேடுவனுயப்போநதுமறைநாயொடுபொலிந்தான்
எண்டங கிவருட் சிறநதவன்யா ரிசைத்தாற்பெரியீ ரிறைஞ்சுதுமே.

## பதப்பொருள்.

| | |
|---|---|
| ஏக: | ஒருவன் |
| வியாதாதிநீசஹ்ருததை ஜவதூக | வேடர்முதலிய நீசசனங்களால் அபகரிக்கப்பட்ட தன்னதான மனைவியையுடையவன், |
| அந்ய: | இன்னொருவன் |
| வ்யாதாயிதோபி | வேடனாயும் |
| நிகமஸ்வபி: | வேதங்களாகிய நாய்களாலே |

| | |
|---|---|
| ஆசரித | ஆச்ரயிககப்பட்டவன் , |
| அநயோ | இவவிருவருகருள் |
| அதிக | சிறநதவன |
| கோவா: | யாவன ? |
| இதி | இதனே |
| வருததா: | பெரியவாகள |
| அநுசிநதியா | ஆலோசிதது |
| ஸதயம | உணமையை |
| ப்ருவநது | சொலலலாம. |
| தமிமம | அநத இவனே |
| வயம | நாஙகள |
| ஆஶ்ரயாம | ஆஶரயிககினறோம |

## பொழிப்பு.

ஒருவன தன மனேவியை வேடா முதலிய இழிஞாகளு மப கரிககு மியலபினனுயினன, இனனெருவன தான வேடனுனுலும வேதஙகளாகிய நாயகளாலே ஆசரயிககபபட்டவனுகவிருககின்றுன்; இவ்விருவரிற சிறநதவனேப் பெரியவாகளான நீஙகள சததியமாகச் சொன்னல்,நாஙகளந்த மஹாபுருஷனேச சரணமாகவடைகின்றோம்.

## விதப்பு.

ஒருவன் வேடா முதலிய இழிஞாகளாலே அபகரிதத மனேவி யை யுடையவனென்றது - ஹரியை, அது அவவரி அவவண்ணம் வேடாகளா லபகரிககப்பட்ட மனேவியை யுடையவனுதலால்.

ஹரி கண்ணனுகததோன்றி இறந்து பட்டபினபு, அவன் மைத் துனனுன பார்ததன் அக்கண்ணன் மனேவியரிற் தீயில் விழுந்திறந்த வர்கள் தவிர வுள்ள மற்றையவாகளே அழைததுக்கொண்டு அததின புரியைக் கருதிவருங்காலத்தி லிடையிலொரு விடத்திற் றங்கியிரு ந்த வொரு இராத்திரியில் அநேகம் வேடர்களான திருடர்கள் வந்து ஆளுக்கொருத்தியை யிழுத்துக்கொண்டு போய்விட்டார்கள். பின்

னா அவ்வேடர்களுடன் போர்புரியத் திறமற்றவனாகப் பார்த்தனும் தன்னூரடைந்தனன் இதனை—

“ ஈரொண்ணாயிராமுதலேழைமாக்களைச்
சீரிலா வேடுவர்சினத்திற்கைக்கொளப்
போரினன்மிகுந்தக்காண்டீவமபூங்கணை
வீரபோடெனவலிவிசையங்கைக்கொடு” என்று ஸ்ரீ பாகவதத்தில் வருதலைக்கொண்டுணர்க.

ஒருவன் வேடனாலும் வேதங்களாகிய நாய்களால் சூழ்பெற்றானென்றது-ஹரனை, அது அவ்வரன் அவ்வாறிருந்திருத்தலால்.

ஹரன் பாசுபதாஸ்திரத்தைக் கருதித் தன்னைக் குறித்துக் காமியார்த்த தவம்புரிந்த அருச்சுனனுக்கருள்புரியும்பொருட்டு வேடரூபமடைந்து சென்றபோழ்து, வேதங்களும் நாயரூபமடைந்துடன்வரச் சென்றனன் இதனை—

[illegible] ।
[illegible] ॥
[illegible] ।
[illegible] ॥ என்று

ஸ்ரீ மஹாபாரதத்தும்,

“ மிக்கவனறவஞ்சோதிப்பானவேட்டுவக்கோலமாகித்
திக்கெலாமன்னனங்கோலந்தொடருமோர்தேவதேவர்
மைக்குழலன்னமபின்னேதொடரமற்றொருகோலத்தைப்
புக்குறத்தொடர்வார்போலப்புகுந்தனர்பொருவில்வேந்தி” என்று குற்றாலபுராணத்தும்,

“ அநந்தவேதமுமிறைவனேவலினன்ஞானிகளாயருக்குச்சு
அநந்தகோடியிற்கோடிகணங்கள்தாவேட்டுவராயருகுபோந்த
வநந்தனாலினித்தரிக்கவரிதரிதிப்பூதலமென்றமரர்கூற
வநந்தமாமுகமாகியடிச்சுவடுநோக்கினுணடவியெல்லாம் ” என்று பாரதத்தும் வருதலைக்கொண்டுணர்க.

## தாத்பரியம்.

ஹரியின் மனைவியாரை வேடர் முதலிய இழிந்தவர்கள் இழுத்துக்கொண்டு போயினார்கள், ஹரன் வேடவுருவடைந்தும் வேதங்களாகிய நாய்களாற் சூழப்பெற்றான் என்பதாம்

## தாரதம்மியம்.

நல்ல ஜாதியார்களால் கைக்கொள்ளப்பட்டாலும் ஒருவன் மனைவியைப் புகழுவோ ரிவ்வுலக முதலிய வெவ்விடங்களிலு மில்லை, அநேக மனைவியரை வேடர் முதலிய நீசஜனங்களால் அபகரிக்கப்படும் துர்ப்பாக்கியத்தினையுடையவனை இந்த உலகத்தில் எவன் சிறந்தவனாக வுள்ளவனென்று கூறுவான். இதனை யுபதேசிக்குங்கால் வேடர்முதலிய நீசர்களா லபகரிக்கப்பட்ட மனைவியையுடைய ஹரி இவ்விஷயத்திற் பலராலும் இகழப்பட்டவனாகின்றான்; வேடரூபத்தை யடைந்தாலும், ஹரன் கௌரவஹானி யில்லாமலிருத்தலால், இவ்விஷயத்திற் சிறந்தவனாகின்றான். ஆதலால் நாங்கள் மனைவியைப் பறிகொடுத்த இழிவடைந்த ஹரியை அப்பிரதானமாக வொதுக்கி கிராதரூபத்திலும் மனைவியுடனும், வேதங்களான நாய்களுடனு மிருக்கும் ஹரனைச் சரணமாக வடைந்து வணங்குகின்றோம்.—எ-று.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

ஏகஸ்ய ஸ்வகஜநாப்ருஶதக்தகாத்ரா அந்யஸ்ய பம்ருதபூத விபூதிரேகா:। கோவாநயோரதிக இத்யநுசிந்திய க்ருததாஸ்ஸதயமப்ருவந்துதமிமம் வயமாஶ்ரயாம:॥

## மொழிபெயர்ப்பு.

பணிநீர் வையத் தொருவனடி பருவிச் சேவை புரியடியா
ரிணிதோன் முதல விடமெல்லா ரியாற் சுட்டுத் திரிதருவோர்
கணிசே ரொருவன் றிருவடியர் ணைமா நீறு காணுதலோர்
எணிலா ரிவருட் சிறந்தவர்க ளிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.

## பதப்பொருள்.

| | |
|---|---|
| ஏகஸய | ஒருவனுடைய |
| ஸேவகஜந | அடிமைகள |
| ப்ருஸ தககதர. | மிகவும சுடபபட்ட சரீரமுடையவாகள், |
| அந்யஸய | மறறொருவனுடைய |
| ஸேவகஜநா | அடிமைகள |
| சுப்ரமிருதுவிபூதிரேகாபூத- | வெணமையாயுட, மிருதுவாயும, பரிசுத்தமாயுமிருககிற விபூதிரேகையோடு கூடினவாகள, |
| அநயோ. | இவ்விருவருககுள |
| அதிக. | சிறநதவன |
| கோவா | யாவன? |
| இதி | இதனை |
| அநுசிந்தியா | ஆலோசிதது |
| வருததா | பெரியவாகள |
| ஸதயம் | உண்மையை |
| ப்ருவநது | சொலலலாம. |
| தமிமம | அநத இவனை |
| வயம் | நாஙகள |
| ஆஸரயாம | ஆஸ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு

ஒருவனுடைய பததசனஙகள் சுடப்பட்ட சரீரத்தினையுடையவாகள், மற்றொருவனுடைய பததசனங்கள் மிகவும வெண்மையான பஸ்மதாரிகளாகவுள்ளவாகள், இவ்விருவர்களுட் சிறந்தவனை இவனென்று பெரியவாகளான நீங்கள் கூறுவீர்களானல், நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாக வடைகின்றோம்.

## விதப்பு.

ஒருவனுடைய பக்தஜனங்கள் சுடப்பட்ட சரீரங்களையுடையவர்களென்றது-ஹரியை, அது அவ்வரி பக்தர்கள் அவ்வாறு சுட்டுக் கொள்ளுதலால். இதனை—

" சென்னியோங்குதண் திருவேங்கடமுடையாயுலகு
தன்னைவாழநின்றநம்பிதாமோதராசகிரா
என்னையுமென்னுடைமையுநின்சக்கரப்பொறியொற்றிக்கொண்டு
நின்னருளேபுரிந்திருந்தேனினியென்திருக்குறிப்பே " என்னும்

நாலாயிரப்பிரபந்தத்தாலுணர்க

ஒருவனுடைய பக்தசனங்கள் வெண்மையும் மிருதுவுந் தூய்மையுமானதான விபூதியைத் தரிக்கப்பெற்றவர்களாக விருக்கின்றார்கள் என்றது-ஹரனை, அது அவ்வரபக்தர்கள் அவ்வாறு தரித்துக் கொள்ளுதலால் இதனை—

" எவரேனுந்தாமாகவிலாடத்திட்ட திருநீறுஞ்சாதனமுங் கண்டாலுள்கி, யுவராதேயவரவரைக்கண்டபோதேயுகந்தடிமைத்திறநினைந்துதங்குவந்துநோக்கி, யிவர்தேவரவர்தேவரென்றுசொல்லியிரண்டாட்டாதொழிந்தீசன்றிறமேபேணிக், கவராதேதொழுமடியார்நெஞ்சினுள்ளேகன்றாப்பூநந்தீச்சுறியைக்காணலாமே" என்ற வருந் திராவிடசூக்தத்தாலுணர்க

## தாத்பரியம்

ஹரிபக்தர் சுட்டப்பட்ட உடம்பினர், சிவபக்தர் விபூதிதாரண சரீரிகள் என்பதாம்

## தாரதம்மியம்

மிகவுஞ் சுட்டப்பட்ட சரீரத்தினையுடைய பக்தர்களை யுடையவனைக்காட்டிலும், மிகவும் பரிசுத்தமான விபூதியைத் தரித்த பக்தர்கள் கஷ்டமில்லாதவர்களாதலாலே சுட்டப்பட்ட தேகங்களை யுடையவர்களை பக்தர்களாகவுடையவனைவிட தூயமையான விபூதிதாரிகளான பத்தர்களையுடையவன் சிறந்தவனாதலால், இவ்விஷயத்திற் றாழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாக வகற்றிச் சிறந்த ஹரனை நாங்கள் வணங்குகின்றோம்.—எ-று. (௩௧)

ஸகோபிதாங்கஹஸவக்ஷடிவத்ரஸாயீ
ஹரந்தோ ஹநாஹிதாடிரஸாஹாவடிசேமவாஸீ।

கோவாநயோரதிக இத்யநுஸந்த்ய வ்ருத்தா:
ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம:॥

ஏகோநிதாந்தமபவதவடபதரசாயீஹ்யநயோஹிதாதருஶமஹா வடமூலவாஸீ । கோவாநயோரதிகஇதய நுசிந்தியவருததாஸஸதயம ப்ருவநதுதமிமவயமாஶரயாம:॥

## மொழிபெயர்ப்பு

தரள மிப்பி யீனறிறைகருந தணணீ ருலகிற சாரொருவன
விரள மொனறி வடததிலையில வீழ்வா னுவான் வேறொருவன
கரள மொனறு களததோடக கலலா னிழலின கணணுறுவான
சரள மொனற லெவரிடைநீ சாறறிற பெரியீா தாழுதுமே

## பதப்பொருள்

| | |
|---|---|
| ஏக: | ஒருவன |
| நிதாந்தம | எபபொழுதும |
| வடபதரசாயீ அபவத | ஆலிலையிறபடுததுககொளளுகிறவனுனை, |
| அநய: | இனனொருவன |
| தாதருஶவடமூலவாஸீ | அபபடிபபடட ஆலமரததினடியிலிருககிறவனுக |
| அபவத | ஆனுன, |
| அநயோ: | இவவிருவருககுள |
| அதிக: | சிறநதவன |
| கோவா | யாவன? |
| இதி | இதனை |
| அநுசிநதிய | ஆலோசிதது |
| வ்ருததா: | பெரியவாகள |
| ஸதயம | உண்மையை |
| ருவநது• | சொல்லலாம. |
| மிமம் | அநத இவனை |
| யம் | நாங்கள் |
| ஆஶ்ரயாம: | ஆஶ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு

ஒருவன் சதா ஆலிலையிற் கிடைப்பவனுகவானுன், இன்னொருவன் அவ்வாலினடியிலிருப்பவனுகவானுன, இவ்விருவருக்குள் பெரியவர்களே! யாவன் சிறந்தவன்? நீங்கள் உண்மையைச் சொல்லுங்கள். நாங்கள் உங்களாற் சொல்லப்பட்ட அந்த மஹாபுருஷனைச் சரணமாக வடைகின்றோம்.

## விசேஷம்

ஒருவன் எப்பொழுதும் ஆலிலையிற் கிடந்தானென்றது - ஹரியை, அது அவரி அவ்வாறு கிடத்தலால். இதனை—

" பாலகனென்றுபரிபவஞ்செய்யேலபண்டொருநாள்
ஆலினிலைவளர்ந்தசிறுக்கனவனிவன்
மேலெழப்பாய்ந்துபிடித்துக்கொள்ளுமவெகுளுமேல
மாலைமதியாதேமாமதிநீ விரைந்தோடிவா" என்னு நாலாயிரப்பிரபந்தத்தாலுணாக

ஒருவன் அவ்வாலின்கீழிருந்தானென்றது-ஹரனை, அது அவ்வரன் அவ்வாறிருத்தலால. இதனை—

" ஓராணீழலொண்கழலிரண்டு - முப்பொழுதேத்திய நால்வர்க்கொளிநெறி-காட்டினை" என்று திருஞானசம்பந்தப்பெருமான் றிருவாயமலர்ந்த திரவிடவேதத்தாலும,

[illegible] என்று உபநிஷத்துக் கூறுதலாலுணாக.

## தாத்பரியம்.

ஹரி ஆலிலையிற் கிடந்தான், ஹரன் ஆனிழலி லிருந்தானென்பதாம்.

## தாரதம்மியம்.

ஒரு ஆலிலையிற் கிடந்து வீணே உறங்குபவனைக்காட்டிலும், ஆலினடியில் ஞானோபதேசியாக இருப்பவன் சிறந்தவன் இதனால் ஆலிலையிற் கிடந்த ஹரியைவிட ஆலினடியிலிருந்த ஹரன் சிறந்தவனாதலால், இவ்விஷயத்திற் குழவடைந்த ஹரியை அப்பிரதானமாக வகற்றி இவ்விஷயத்திற் சிறந்த ஹரனைப் பிரதானமாக நியாயமுகத்தாலுணர்ந்து நாங்களந்த மஹானாகிய ஹரனைச் சரணமாக வடைந்து வாழ்கின்றோம் — எ-று (௯௨)

ஏகோ ததௌ ஸிதம்ருதம் திலகம் லலாடே
ஹ்ருத்பத்மகே ஹரிஹரம் ஸ்வதநோர்வஹோ(அ)ந்ய: |
கோ வா நயோரதிக இத்யநுசிந்த்ய வித்வாந்
ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம: ||

ஏகோ ததௌ ஸிதம்ருதம் திலகமமலம் லலாடே ந்யக்ரோதமூலே ததௌ ஹஸ்த வஹமதிலகமலலாடே | கோவாநயோரதிக இத்யநுசிந்த்ய வருததாஸ் ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம ||

## மொழிபெயர்ப்பு.

கொண்டற் கச்சுக கிரிமுலையாள் கோதை யிடத்திற் கூடுமொருவன்
மண்டிற் றிடுமோ நெற்றியினை மற்று மொருவன் குற்றமிலா
தொண்டுற் றிடுமெவ் வுதவகனை ஒருநற் றிலத மாவுடையான்
கண்டுற் றிவருட் சிறந்தவனைக் கண்டார் பெரியோர் காணுதுமே.

## பதப்பொருள்.

| | |
|---|---|
| ஏக: | ஒருவன் |
| லலாடே | நெற்றியில் |
| ஸிதம்ருதம் | வெள்ளை மண்ணை |
| திலகம் | திலகமாக |
| ததௌ | தரித்தான், |
| அந்ய: | இன்னொருவன் |

ஹரதவம — அககினியை
லலாடே — நெறறியில
திலகம — திலகமாக
தஜெள — தரிததான,
அநயோ — இவவிருவருககுள
அதிக — சிறநதவா
கோவா — யாவன
இதி — இதனை
அநசிநதியா — ஆலோசிதது
வ்ருததா — பெரியவாகள
ஸதயம — உணமைய
பருவாநது — சொலலலாம
தமிம — அந இவனை
வயம — நாஙகள
ஆமரயாம — ஆசரயிககினறோம

## பொழிப்பு

ஒருவன் திலகமாக வெளளை மணணை நெறறியிலணிநதான, மற றொருவன திலகமாக அககினியை நெறறியிலணிநதிருககின்றான், இவவிருவருட் சிறநதவனைப பெரியவாகளே நீஙகள கூறினால, நாங களநத மஹாபுருஷனைச சரணமாக வடைநது வாழ்கினறோம

## விதப்பு.

ஒருவன நெற்றியில மணணைத தரிததிருககினறானெனறது-ஹரியை, அது அவ்வரி அவவாறு தரிததிருததலால இதனை,—

“பூப்பிட்டானைப்புரநதருளெனறுமுன
கூப்பிட்டானைததன்குக்கியுட்கூவெலாம
ஆப்பிட்டானையகிலகனந்தனைக்
காப்பிட்டானைக்காப்பிட்டனன்காரிகை” என்று பாதமோத

தரத்தும்,

“ஆவினீரைந்தினுலமஞ்சனமாட்டியசின்றுமணநாறவிளங்கிச்
சாய்பன்னிரண்டுநாமமுஞ்சாத்திச்சதுமறையோதுயவேதியர்கள்
நாவின்மந்திரநீருடலெல்லாந்தெளித்தாங்கவையிலமோநாதானமுதலகிந
காவிகொள்விழியார்கருப்புரதீபங்காட்டினார்கயிலையுறைப்பலநால்” என்று பாகவதத்தும் வருதலைக்கொண்டுணர்க.

ஒருவனக்கினியைத் திலகமாகவுடையவனாக விருக்கின்றனென்றது-ஹரனே, அது அவ்வரன் அவ்வாறு நெற்றியில் திலதம்போன்ற அக்கினிக்கண்ணை உடையவனாக இருத்தலால் இதனை—

யொலீஶஙெயவசீவொ ஈாநூஶாலஙகாரஃ - காஒஂவொஃ

ஸஂரு ஶ்ரீநெத்ரும் என்று பைப்பலாத சுருதியிலும்,

“சுற்றுப்பராசரபதிநின்றிருப்பாதப்பலாம்
பற்றெனறிலோமென்றழைப்பப்பாவையுண்ணுசையுண்டான்
செற்றங்கனங்கனைத்தீவிழித்தோமேற்றன்றிலைப்பம்பலவன்
நெற்றியிற்கண்ணைக்காட்டகண்டுநாணப்பெற்றினிக்காணப்தென்னே”
என்று திரவிடசுருதியிலும்,

“சந்தனக்களபந்துதைந்தநன்மேனித்தவளவெண்பொடிமுழுதாடும், செந்தழலுருவிற்பொலிந்தநோக்குடையதிருநுதலவாகிடமபோலும், இந்தனவிலங்கலெறிபுனத்தப்பட்டெரிவதொத்தெழுநிலமாட, மந்தணரழலோம்பலைபுனற்களந்தையணிகிழாத்தத்தேசசரமே” என்று திருவிசைப்பாவிலும் வருதலைக்கொண்டுணர்க.

## தாத்பரியம்

ஹரி நெற்றியில் மண்ணைத் தரித்தான், ஹரன் நெற்றியிலக்கினிக்கண்ணைத் தரித்தான் என்பதாம்.

## தாரதம்மியம்.

ஒருவன் சாமான்யமாக வெல்லாராலும் தரிக்கத்தக்க வொரு வஸ்துவைத் தரித்திருப்பானுயின் அவனை யாவரும் மதிப்பாகக்கொள்ளார்கள்; பிறராற் றரிக்கமுடியாத வஸ்துவை ஒருவன் தரித்திருப்

